ரூ 3.50

திருவள்ளுவராண்டு 2037

ஆடி - ஜூலை 2006



# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

திருப்புத்தூர் அருள்தரு சிவகாமசுந்தரி உடனுறை திருத்தளிநாத சுவாமி திருக்கோயில் தேர்த்திருவிழா 8-6-2006

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | | மாதம் | : ஆடி |
| மலர் | : 20 | இதழ் | : 7 |





# புடம் போட்ட தங்கம்!

பொதுவாழ்வில் நேர்மை, தனிவாழ்வில் தூய்மை, வார்த்தைகளில் வாய்மை இந்த அற்புதக் கலவையில் ஒரு மகத்தான மனிதர் உதித்து எழுந்தார். அவருக்குக் காலம் தந்த பெயர்தான் கர்மவீரர் காமராசர்.

Some are born great
Some acheive greatness
and some have greatness
thrust upon them

என்று சேக்ஸ்பியர் கூறுவார். பிறக்கும்போதே பெருமையோடு பிறப்பவர்கள் ஒருவகை. பெருமை சிலர் தோள்களின் மீது திணிக்கப்படுகின்றது. முயன்று பெருமை ஈட்டுபவர்கள் தனிவகை. "நின்றால் தலை இடிக்கும். நிற்பதற்கே இடம் இருக்கும் குடிசையில்" பிறந்த கோமான்தான் நாட்டில் தலைவிதியை மாற்றிக்காட்டிய தலைமகனாய் விளங்கிய தனிவகையைச் சேர்ந்த காமராசர். துன்ப நீக்கத்திற்குக் கல்வியே மருந்து என்று புரட்சிக் கவிஞன் அறிவிக்கின்றான். "கற்க" என்று ஆணையிட்டார் திருவள்ளுவப் பெருமான்! எண்ணெய் இல்லாத தலை; ஒதுங்கி வாழக் குடிசை இல்லாத வயிறார உண்ண ஒருவேளைக்குக்கூடக் கஞ்சி இல்லாத, ஏழை தன் பிள்ளையை எப்படிப் பள்ளிக்கு அனுப்புவான்? என்று சிந்தித்து, கலைமகளும் கைவிட்ட பிள்ளைகளுக்குக் கல்விக்கண் திறந்துவிட்டார்

காமராசர். மேட்டுக்குடிகளுக்கு மட்டும் சொந்தமாயிருந்த கல்வி ஏழைகளின் வீடுகளுக்கு இடம் பெயர்ந்தது. இரும்புப் பெட்டியில் சிறையிருந்த இலக்கியம் ஏழைகளுக்குப் பரிமாறப்பட்டது. தடுக்கி விழுந்தால் தொடக்கப்பள்ளி, ஓடிவிழுந்தால் உயிர்நிலைப்பள்ளி என்ற புதிய கல்விப் புரட்சிக்கு வித்திடப்பட்டது. முடியாட்சிக் காலத்தில் எல்லோருக்கும் உடைமையாகாத கல்வி, மக்களாட்சிக் காலத்தில் - குறிப்பாக காமராசரின் காலத்தில் எல்லோருக்கும் உரிய பொதுவுடைமையாக மாற்றப்பட்டது.

இன்று கல்வியின் தகுதி எல்லோருக்கும் பொதுமையாகி இருக்கின்றதா? என்பதுதான் கேள்வி. நகர்ப்புறக் கல்வி, கிராமப்புறக் கல்வி என்று கல்வி உலகத்தில் இரண்டு சாதிகள் இடம்பெற்றுவிட்டன. ஒரு புறத்தில் எல்லா வாய்ப்புகளும் வசதிகளும் உடைய கல்வி நிறுவனங்கள்! மறுபுறத்தில் மழைக்காலம் வந்தால் விடுமுறை விட வேண்டிய நிலையில் கல்வி நிறுவனங்கள்! கிராமப்புறக் கல்வி ஊட்டச்சத்து குறைந்ததாக, ஆரோக்கியம் குறைவானதாகக் காணப்படுகின்றது. கிராமப்புறத்துக் கல்வியின் தரத்தை மேம்படுத்த வேண்டியது அவசர அவசியமானது.

துறந்தாரும் துறக்க முடியாத தாயின் உறவில்கூட காமராசர் சலனப்பட்டதில்லை. சஞ்சலம் அடைந்தது இல்லை. தன் மகன் முதலமைச்சராயிருப்பதால் தன் வீட்டிற்கு அனேகர் விருந்தினராக வருகின்றனர். வருகின்றவர்களை உபசரித்து அனுப்பச் செலவு கூடுகின்றது. எனவே தனக்கு அனுப்பும் மாதச் செலவு தொகையைக் கூடுதலாக்கித் தருமாறு தாய் விண்ணப்பிக்கின்றார். வருகின்றவர்களை சும்மா பார்த்து அனுப்பு. நான் அனுப்புகின்ற 120 ரூபாய் பணத்திற்குள் சிக்கனமாய் வாழ்க்கையை நடத்து! என்று பொது வாழ்வில் நேர்மையையும் எளிமையையும் போற்றிய தலைமகனை எண்ணித் தமிழகம் பெருமைப்பட்டது.

புதிய இந்தியாவே! பொன்னை உருக்கிப் பெற்றது போல் புடம் போட்ட தங்கமாய் ஒளிவிடும் தேசமே! உணர்ந்துகொள்! கனவுகளைச் சுமந்துகொண்டிருக்கும் இந்திய தேசத்து இளைஞனே! வேதங்களும் சாத்திரங்களும் அரசியல் சட்டங்களும் அறியாத சாதாரண மனிதர், வாழ்ந்த வாழ்க்கையால் மாபெரும் மனித நேய மகா மேருவாய் உயர்ந்து நிற்கின்றார்.

**"தங்கமே! தண்பொதிகைச் சாரலே! தண்நிலவே!
சிங்கமே!? என்றழைத்துச் சீராட்டும் தாய் தவிரச்
சொந்தம் என்று ஏதும் இல்லை; துணை இருக்க மங்கையில்லை;
தூயமணி மண்டபங்கள் தோட்டங்கள் ஏதுமில்லை.
ஆண்டி கையில் ஓடிருக்கும் அதுவும் உனக்கில்லை"**

என்று காமராசரின் தியாக வாழ்க்கையை, கவியரசர் கண்ணதாசன் சில வரிகளில் ஓவியமாய்த் தீட்டிவிட்டார். இந்தச் சத்திய வரிகள் வாசிப்பதற்கு மட்டுமல்ல, சரித்திரமாய் வாழ்ந்துவிட்ட தலைவரைப் போல் பொது வாழ்வில் புடம்போட்ட தங்கமாய் வாழ்வதற்குமே!

**- தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

(கல்வி வளர்ச்சி நாள் செய்தி)

# காமராசரின் எளிமை!



காமராஜர் ஆட்சிக்காலத்தில் 1955-ல் தமிழ்நாட்டைப் பெரும் புயலும் மழையும் பாதித்திருந்தது. காமராஜர் மிகவும் கவலைக்குள்ளானார். ஊர்தோறும் விரைவாகச் சென்று பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் கூறினார்; உதவிகளும் செய்தார்; இராமநாதபுரம் மாவட்டத்திலும் அவருடைய பயணம் அமைந்திருந்தது. ஒரு நாள் பகல் பதினொரு மணிக்கு ஒரு ஜீப் வருகிறது. அதில் முன் சீட்டில் தலைவர் - தமிழ்நாட்டின் முதல்வர் காமராஜர்! பின் ஒரு கார் வருகிறது! மழையால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அரிசி வழங்கிக் கொண்டிருக்கிறோம்! ஜீப் நின்றது. எதிர்பாராதவிதமாகத் தலைவர் இறங்கி வருகிறார். வரிசையில் நின்ற மக்களிடம் பேசுகிறார். பின் நம்மைப் பார்த்து "நிவாரண வேலை செய்கிறீர்களா?" என்றார். வியப்பின் காரணமாக நம் தரப்பில் மௌனம். காமராஜர் "இன்று ஒரு நாள்தான்! இராமநாதபுர மாவட்டப் பயணத்தை முடிக்க வேண்டும்; போய் வருகிறேன். கவனித்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லிப் போய்விட்டார். என்ன எளிமை! இத்தகைய எளிமையை இனி என்று காண இயலும்? அவர் சென்று பல மணி நேரங்கழித்து ஒரு டாக்ஸியில் போலீசார் வந்தனர்... போயினர்!

**-அருள்நெறித்தந்தை**

(மண்ணும் மனிதர்களும் பக் 34-35)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 65. சொல்வன்மை

சொல்லப்படுவது சொல். மனம், புத்தி, சித்தம் முதலிய அகநிலை உறுப்புக்கள் ஒன்றிணைந்த நிலையில், சிந்தித்து முடிவு செய்தவற்றை மற்றவர்கள் துணையுடன் செயற்படுத்தவும் மற்றவர்கள் பயனுறவும் அயலவர்களை ஆயத்தப்படுத்தவும் சொல்லப்படுவது சொல்.

"சொல் வன்மை" என்பதில் உள்ள "வன்மை" என்ற சொல் வன்முறையைக் குறிக்கும் வன்மையன்று. சொல்லின் உறுதி என்றே பொருள் கொள்ள வேண்டும். சொல்லில் வன்மையாவது; அடிக்கடி மாற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லாது ஒருதலையாக ஆராய்ந்து முடிவாகச் சொல்லுதல், மேலும் எளிதில் மற்றவர்களுடைய விவாதங்களால் பயனற்றுப் போகக்கூடிய அல்லது நிலைத்து நிற்க முடியாத சொற்களாக இல்லாமல் சொற்களைத் தேர்ந்து தெளிந்து சொல்ல வேண்டும். சொற்களின் பயனீட்டமாகிய செயல் தூண்டல், நேயமிக்க உறவு முதலியன தவறாமல் சிந்திக்கும் சொற்கள் பயனுடைய சொற்கள்.

நல்லனவும் கூட எடுத்துக் கூறும் திறமும் பாங்கும் இன்மையால் பயனற்றுப் போகின்றன. ஒரு பொருளும் படாத சொற்கள் சொல்லும் திறத்தால் பாங்கால் பயனைத் தந்து விடுகின்றன.

*நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்*
*யாநலத்து உள்ளதூஉம் அன்று.* (641)

ஒருவர் பெறக்கூடிய எல்லா நலன்களிலும் நாநலமே தலைசிறந்தது. நாநலம் மற்ற நலன்களிலும் அடங்கித் தோன்றுதலுடன் அந்நலன்களில் எல்லாம் சிறந்து விளங்குகின்றது.

ஆக்கவும், அழிக்கவும் வல்லது சொல். செயலூக்கம், நன்று தேடல், உறவினைப் பெறுதல் ஆகியனவெல்லாம் நாநலத்தின் பயன்களேயாம்.

*ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்*
*காத்துஓம்பல் சொல்லின்கண் சோர்வு.* (642)

ஆக்கமும், அழிவும் சொற்களால் வருவன. ஆதலால் சொல்லின்கண் சோர்வு வராமல் பாதுகாத்துக் கொள்க.

சொற்களில் சோர்வுபடுதலாவது, தகாதனவற்றைச் சொல்வது.

*கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்*
*வேட்ப மொழிவதாம் சொல்.* (643)

நமது சொற்களைக் கேட்டவர்களை நட்புணர்வுடன் பிணைக்கக் கூடியனவாகவும் கேளாரும் - நட்பை அவாவிக் கேளாதவரும் கேட்க விரும்பும் சொற்களை மொழிவதே சொல்.

சொற்களின் தோற்றம் - வளர்ச்சி நட்புணர்வினை வளர்ப்பதற்கே என்பது தேற்றம். ஆதலால் வெறுப்பு, பகையை வளர்க்கும் சொற்களைச் சொல்லக்கூடாது என்பது தெளிவு.

*திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்*
*பொருளும் அதனின்ஊங்கு இல்.* (644)

சொற்களின் திறன் (விளைவிக்கும் பயன்) அறிந்து சொல்லுக. இங்ஙனம் சொல்லுதலில் சிறந்த அறமும் பொருளும் ஈண்டு இல்லை.

எளிதில் கேட்பவரின் நெஞ்சத்தில் புகுந்து பயன் விளைவிக்கும் சொற்களே திறப்பாடுடைய சொற்கள்.

"கேட்பவரின் திறன் அறிந்து சொல்லுக" என்று பொருள் கொள்ளுதலும் கூடும்.

சொற்களின் பயன் அறமாகவும் பொருளாகவும் அமையும் என்பது தெளிவு.

*சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை*
*வெல்லும்சொல் இன்மை அறிந்து.* (645)

ஒன்றைச் சொல்லும்முன் ஆராய்ந்து சொல்லுக. சொல்லும் சொல்லை வேறொரு சொல் வெல்லாமல் இருக்கும்படியாகச் சொல்லுக.

"சொல்" - மானுடத்தின் நிகழ்வுகளுக்குப் புறநிலையில் தொடக்கமாயமைவது. சொல்லப்பெறும் சொல் மற்றவர்களால் ஏற்றுக் கொள்ளப்பெறாத நிலையில் விவாதங்கள் வளரும். வெற்றி - தோல்விச் சிக்கல்கள் உண்டாகும் ஆதலால், பிறிதொரு சொல் வெற்றி பெறக்கூடிய சொற்களைச் சொல்லற்க.

*வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்*
*மாட்சியின் மாசற்றார் கோள்.* (646)

பிறர் விரும்பி ஏற்கத்தக்கவாறு சொல்லுதலும் பிறர் கூறும் சொற்களின் பயனைக் கொள்ளுதலும் நல்லவர்களின் கோட்பாடு.

பிறர் சொற் பயன் கோடல் என்றதால் தாம் சொல்லுவதே சரி என்ற பிடிவாதப் போக்கு மறுக்கப்படுகிறது.

*சொலல்வல்லன் சோர்வுஇலன் அஞ்சான் அவனை*
*இகல்வெல்லல் யார்க்கும் அரிது.* (647)

எண்ணியவற்றைச் சொல்லும் வல்லமை உடையவனாகவும், மறதியில்லாதவனாகவும், அவையஞ்சாதவனாகவும் உள்ளவனை யாரும் வெல்லுதல் இயலாது.

பலர், நிறைய எண்ணுவார்கள். ஆனால், சொல் வன்மையின்மையால் ஆதரவு திரட்ட இயலாது என்ற கருத்தைச் "சொலல்வல்லன்" என்று கூறி உணர்த்தியது.

"சோர்விலன்" தாம் கூறும் சொற்கள் உடனடியாக ஏற்றுக்கொள்ளப்படாமையினால் தளர்ந்துபோய்த் தொடர்நிலை நிற்காமையை உணர்த்தியவறாயிற்று. "அஞ்சான்" என்றது மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்று அஞ்சி எண்ணுவதைச் சொல்லாமலே தவிர்த்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

*விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது*
*சொல்லுதல் வல்லார்ப் பெறின்.* (648)

சொல்லப்பெறும் காரியங்களை முறைப்படுத்தி இனிய முறையில் சொல்லும் திறனுடையாரைப் பெறின் உலகம் அவர்தம் சொற்களைக் கேட்டுத் தொழிற்பாடுறும். இத்திருக்குறள் வரலாற்றுப் போக்கில் ஆய்வுக்குரியது.

பலரைச் செயற்பாடுறுத்த வேண்டும் எனில் முறையாக இனிதாக ஆணையிடும் சொல்லாற்றலும் வேண்டும் என்பதாயிற்று.

*பலசொல்லக் காமுறுவர்மன்ற மாசு அற்ற*
*சிலசொல்லல் தேற்றா தவர்.* (649)

நல்லனவாய் சில சொற்களைக் கொண்டு கேட்பாருக்குத் தெளிவுண்டாக்க இயலாதவர்கள் பலப்பல சொல்லக் காமுறுவர்.

தெளிவு, சொற்களின் தொகுதியில் அல்ல. சொல்லப்பெறும் முறையில்தான் இருக்கிறது. தெளிவாய்ச் சொல்லும் திறனற்றவர்களே பல சொல்லக் காமுறுவர். பல சொல்லுதலால் நோக்கங்கள் பாழ்படுதலும் கூடும். காலச் சேதமும் ஆற்றல் செலவும் கூடும்.

*இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது*
*உணர விரித்துஉரையா தார்.* (650)

கற்றறிந்தனவற்றைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்க இயலாதவர்கள் மலர்ந்தும் மணமில்லாத மலர் அனையர்.

கற்பது, அறிவதற்காக மட்டுமன்று சொல்லவுமேயாம். கற்றுயர்ந்ததைச் சொன்னாலே அறிவு வளர்ந்து செயற்பாட்டுக்கு வருகிறது.

(தொடரும்)

*குற்றம் என்பது செய்யக்கூடியதைச் செய்யாதிருத்தல், செய்யக் கூடாததைச் செய்தல்.*

-அருள்நெறித்தந்தை

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

மீட்சிப் படலத்தில் ஒரு காட்சி. சிவபெருமான் கட்டளையால் நில உலகிற்கு வந்த தசரதன், சீதை இராமன் இலக்குவன் ஆகியோருக்கு ஆசி வழங்கி இராமனைப் பார்த்து "என்னிடம் ஏதேனும் கேட்டுப் பெறுக" என்கின்றான்.

அப்போது இராமன் ஐயனே! தீயள் என்று நீ ஒதுக்கி வைத்த என் தெய்வமும் (கைகேயி) அந்தத் தெய்வத்தின் மகனும் (பரதன்) எனக்குத் தாயாகவும் தம்பியாகவும் ஆக வேண்டும். இதுவே நான் கேட்கும் வரம் என்கின்றான்.

அதற்குப் பதிலாக மன்னன் தசரதன் இராமனிடம் பரதன் வேண்டுமானால் உனக்குத் தம்பியாகட்டும். ஆனால் உன்னைக் காட்டுக்கு அனுப்பிய பாவியைத் தாயாகத் தரமாட்டேன் என்கிறான். இதனைக் கேட்டவுடன் தசரதனை நோக்கி இராமன் கூறியதாகக் கம்பன் கூறும் செய்தி மிகவும் கவனிக்க வேண்டிய ஒன்றாகும்.

"ஊன்பிழைக் கிலாஉயிர்நெடிது அளிக்கும் நீளரசை
வான்பிழைக் கிதுமுதல் எனாதுஆள்வுற மதித்து
யான்பிழைத் ததல்லால் என்னை ஈன்ற எம்பிராட்டி
தான் பிழைத் ததுண்டோ என்றான் அவன்சலம் தவிர்த்தான்"

என்னும் இந்தப் பாடலின் பொருளைப் பார்ப்போம்.

(வெண்கொற்றக் குடையின் கீழ் தங்கியிருக்கும்) "உயிர்களுக்குத் துன்பம் நேரிடாமல் காக்கவேண்டிய (கடமையுடைய) அரசாட்சியைப் பெரிய தவற்றுக்கு இதுவே முதல் காரணம் எனக் கருதாமல் ஆள ஒப்புக் கொண்டதாகிய எனது பிழையைத் தவிர" என்னை ஈன்றவளாகிய (கைகேயி) எம்பிராட்டி செய்த தவறு இதில் ஏதேனும் உண்டோ என்றான்.

கேட்ட தசரதனும் கோபம் நீங்கினான்" என்பது இப்பாடலின் பொருள்.

பிழையை ஒப்புக்கொள்ளும் பெருங்குணம் கொண்டவன் இராமன் என்ற வகையில் அயோத்தியில் தம்பி இலக்குவனிடமும், ஆரணியத்தில் தம்பி பரதனிடமும் இலங்கையில் தந்தை தசரதனிடமும் தானே தவறு செய்தவன் என்றும், அதனாலேயே பெரிய தவறுகள் நேரிட்டன என்றும் அவன் சொல்லிய செய்திகள் கோசல நாட்டு ஆட்சிப் பொறுப்புக்கு உரியவன் பரதனே என்பதை உறுதிப்படுத்துகின்றன. இராமனின் பேச்சுக்களைத் தொடர்ந்து கவனிக்கும்போது அவன் தனக்கு உரிமை இல்லாத அரசாட்சியைத் தெரிந்தே ஏற்றுக்கொள்ள அவன் சொல்லும் காரணம் தகப்பன் கட்டளை மன்னன் கட்டளை என்பது. இராமன் சொல்லும் காரணம் சரியா! தவறா! என்பது வேறு. அது பற்றிய ஆய்வு இங்கே தேவையில்லை.

ஆட்சியில் தனக்கு உரிமை இல்லை எனத் தெரிந்திருந்தும் இராமன் முடிசூட்டிக்கொள்ள முன்வந்ததைக் கூனியும் கைகேயியும் ஒப்புக்கொள்ளவில்லை. அவ்வாறு அவன் செய்ததைக் குற்றமாகவே கொள்ளுகின்றனர். தசரதனோடு சேர்ந்தே அவன் செயலாற்றியிருக்கின்றான் என உறுதியாக நம்புகின்றனர். அது காரணமாகவே அவனைக் காட்டிற்கு அனுப்ப முடிவு செய்கின்றனர். தவறு செய்யாத தன் மகனை ஏன் காட்டிற்கு அனுப்பினாள் கைகேயி எனத் தசரதன் நெஞ்சில் நின்ற கேள்விக்கும், அதை ஒட்டி நம் உள்ளத்தில் தோன்றிய அந்தக் கேள்விக்கும் இப்போது விடை கிடைக்கின்றது அல்லவா? ஆம்! விடை கிடைக்கின்றது.

(தொடரும்)

குடி, சூது முதலிய எல்லாத் தீங்குகளையும் விட மோசமானது நம்பிக்கைத் துரோகம் செய்வது. வஞ்சமனத்துடன் உறவைக் காட்டிப் பகையை முடிப்பது, இன்று இத்தகைய முத்தநாதன்கள் பல்கிப் பெருகிவிட்டனர். இனிய செல்வ, பல ஆண்டுகள் பழகியவர்கள்கூட அவர்களுடைய சுயநலம் நிறைவேறாத போது (பொதுநலத்திற்கு எதிரானது சுயநலம்) மறைவாகச் சூது செய்கின்றனர். இவர்களிடம் நாம் உறவு கொண்டு பழகிய காலமெல்லாம் பாழாகிறது.

**- அருள்நெறித்தந்தை**

(15.4.94 மக்கள் சிந்தனை)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# மருந்தென வேண்டாவாம்

(மருத்துவர்.முனைவர். இரா. கலைக்கோவன்
திருமதி. கண்ணம்மாள்)

செரித்த பின் பசியுணர்வு அறிந்து அடுத்த உணவு கொள்ளலாம் என்று கூறும்போதுதான், “அளவறிந்து உண்க” எனும் வழிகாட்டலை வைக்கிறார் வள்ளுவர். “அளவு” எல்லாவற்றிலும் இன்றியமையாதது. அளவு தெரியாத வாழ்க்கை அவலத்தில் முடிந்துவிடும். அதனால்தான், “ஆற்றில் போட்டாலும் அளந்து போடு”, எனும் தமிழ்ச் சிந்தனை பிறந்தது. அதன் காரணமாகவே பொருள் போற்றி வழங்கும் நெறி சுட்டுமிடத்து வள்ளுவரும், ஆற்றின் அளவறிந்து ஈக. என்று அறஞ்செய்யுமிடத்தும் அளவின் இன்றியமையாமையை அறிவுறுத்துகிறார். “அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உள போல இல்லாகித் தோன்றாக் கெடும்” என்பதும் வள்ளுவச் சிந்தனைதான்.

உணவின் அளவு, தேவையின் அளவு, உணவுப் பொருட்களின் சத்தளவு எனும் மூன்றையும் ஒருங்கிணைத்துக் கூறும் இந்த “அளவு” என்ற சொல்லோடு, வள்ளுவர், “தீ” எனும் ஓரெழுத்தொரு மொழியை இணைக்கும் போதுதான் தீயளவு என்ற புதிய சிந்தனை ஊற்றெடுக்கிறது. இது உலக மருத்துவ வரலாற்றில் வேறெந்த நாட்டு அறிவியல் மேதையும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை கருதிக்கூடப் பார்க்காத கோட்பாடாகும். “அருந்தியது போற்றி, அற்றது போற்றி உண்க” என முதற்கூறி, “அளவறிந்து உண்க” எனத் தொடர்பவர், “தீயளவின்றித் தெரியான் பெரிதுண்ணின் நோயளவின்றிப் படும்” என்பதைக் காரண காரியக் கூற்றாகப் பின்வைக்கிறார்.

இந்தக் குறளில் உள்ள “படும்” என்னும் சொல் இறத்தலைக் குறித்தது. “பட்டான்” எனும் கல்வெட்டுச் சொல்லாட்சி காண்க. தீயின் அளவு தெரியாமல் தேவைக்கு மேல் உணவு உட்கொள்பவர்கள் பல்வேறு நோய்களுக்கு ஆளாகி உயிரிழப்பர் எனும் பொருளிலமைந்த இச்சிந்தனை குறிக்கும் தீயளவைப் பசித்தீயின் அளவாகவும்

கொள்ளலாம். உடலுக்குத் தேவையான வெப்ப அளவைச் (கலோரி) சுட்டும் உணவளவாகவும் கொள்ளலாம். வள்ளுவருக்குக் "கலோரி" தெரியுமா? "கலோரி" என்ற சொல் அவர் காலத்து இல்லைதான். ஆனால், உணவின் அருமை பற்றியும் அதன் செரிமானம், தேவை, பயன்பாடு, ஒவ்வாமை என உணவுத் தொடர்பான அனைத்து அறிவியல் உண்மைகளையும் மிகத் தெளிவாக அறிந்துவைத்திருந்த உணவியல் மேதையாக, மருத்துவ அறிஞராக வெளிப்படும் வள்ளுவர், "கலோரி" என்ற சொல்லால் இன்றைய அறிவியல் எதைச் சுட்டுகிறதோ, அதைத்தான் "தீ" என்ற சொல்லால் சுட்டியுள்ளாரென்று துணிந்து கூறலாம்.

உணவியலின் இன்றைய சிந்தனை குறைந்த கலோரி, குறைந்த கொழுப்பு உணவே நலம் காக்கும் என்கிறது. பல்வேறு ஆய்வுகளுக்குப் பின் தரப்பட்டிருக்கும் இவ்வறிவூட்டல் வள்ளுவத்தின் காலத்தால் முற்பட்ட உணவுக் கோட்பாடுகளின் உண்மைத் தன்மைக்கு உரைகல்லாகின்றது. ஒரு மனிதன் அவன் சார்ந்த பணிச் சூழல்களில் இயல்பாகச் செயற்படுத்துவதற்குக் கொள்ளவேண்டிய உணவளவை உடலமைப்பு, பசித்தேவை, வாழுமிடம் கொண்டு நிர்ணயிக்கிறார்கள். அமர்ந்து பணியாற்றும் ஆடவர்கள் 2,400 கலோரியும் உடல் உழைப்பு மிக்கவர்கள் 3,900 கலோரியும் தரக்கூடிய உணவைக் கொள்ளவேண்டும். பெண்கள் பேறு காலத்தில் 2,400 கலோரியும் பிற்காலத்தே 1,900 கலோரியும் தரக்கூடிய உணவைக் கொள்ளவேண்டும். இவ்வளவுகளைப் பற்றிக் கவலைப்படாது, இவற்றினும் குறைவாகவோ அல்லது மிகையாகவோ உண்பவர்கள் பல்வேறு நோய்களுக்கு ஆளாவது கண்கூடு. இதைத்தான் மிகினும் குறையினும் நோய் செய்யுமென்று குறித்தார் வள்ளுவர்.

நன்கு பசித்திருக்கும் நிலையிலும் தனக்குரிய அளவு உணவையே ஒரு மனிதன் உட்கொள்ள வேண்டும். அதுவே அவன் உடலை நீண்ட காலம் நலத்தோடு காப்பாற்றும் வழியாகும் என்பது வள்ளுவர் அறவுரை.

மாறுபாடு இல்லாதன உண்க

பல்வேறு வகையான ஒவ்வாமைகளில் உணவு ஒவ்வாமை

குறிப்பிடத்தக்கது. எல்லோரும் எல்லா வகையான உணவுகளும் கொள்ளமுடியாது. சிலருக்குச் சில உணவுகளை உட்கொண்டால் உடனே அழற்சியோ, ஒவ்வாமை வெளிப்பாடுகளோ, வயிற்றுப்போக்கோ ஏற்படும். ஏற்கனவே நோயுற்றிருப்பவர்களுக்கும் நோய்வாய்ப்பட்டு நலமடைந்தவர்களுக்கும் மருத்துவர்கள் உணவுக் கட்டுப்பாடுகள் விதிப்பதுண்டு. நீரிழிவு நோயுள்ளவர்கள் சர்க்கரை, கிழங்குகள், இனிப்பு வகைகள், மாவுச்சத்து அதிகமுள்ள பழங்கள் கொள்ளக்கூடாது.

இரத்த அழுத்தம், இதய நோயுள்ளவர்கள் கொழுப்புச் சத்துள்ள உணவுகளை அறவே தவிர்க்க வேண்டும். வறுவல் வகை உணவுகள் இவர்களுக்குக் கூடாது. இவையெல்லாம் நலத்தில் மாறுபாடுகளைத் தோற்றுவிப்பன என்பது வள்ளுவம். அதனால், பசித்துண்ணும்போது, அளவறிந்து உண்பதோடு, மாறுபாடில்லாத உணவாகக் கொள்ள வேண்டும். "மாறல்லது துய்க்க" என்னும் சொற்களால் உடலுக்கு ஏற்புடைய, நலத்திற்கு உரிய உணவுகளைக் கொள்ள வழிகாட்டும் வள்ளுவப் பெருந்தகை, அதை ஒழுங்கு நெறியாகக் கொள்ளவேண்டுமென்பதை அறிவுறுத்தவே "கடைப்பிடித்து" என்ற சொல்லையும் பெய்து வைக்கிறார்.

"அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து"

மறுத்துண்க

விருந்தூட்டல் தமிழர் பண்பாடு. "செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருக்கும்", பழக்கத்தில் ஊறியவர்கள் தமிழர்கள் என்பதை நன்கறிந்திருந்த நிலையில்தான், இந்நாளைய உணவியலாளர்கள்கூடச் சிந்தித்துப் பார்த்திராத ஓர் அரிய கருத்தை உணவியல் கோட்பாடாக முன்வைக்கிறார் வள்ளுவர். விருந்துக்கு ஆட்படுவோருள் நோய் வயப்பட்டவரும் இருப்பர். நோய் தீர்ந்து நலம் வளர் நிலையில் உள்ளாருமிருப்பர். அளவாய்க் கொள்ளவேண்டும்; ஏற்புடையனவே கொள்ளவேண்டும் என்று மருத்துவர்களால் அறிவுறுத்தப்பட்டாரும் இருப்பர். விருந்தூட்டுபவர்கள் இவர்தம்

நிலையறியாதிருக்கலாம்; அல்லது நிலையறிந்திருந்தும், "ஒருநாள்தானே, ஒன்றும் ஆகாது, கொள்ளலாம்" என்ற எண்ணத்தில் ஆகாதனவற்றைக்கூட அள்ளி இடும் ஆர்வத்தோடு செயற்படலாம். இத்தகு போக்குகளையெல்லாம் உணர்ந்தவராகவே வள்ளுவர் மிகுந்த எச்சரிக்கையோடு நடந்து கொள்ளுமாறு விருந்துண்பவர்களுக்கு வழிகாட்டுகிறார்.

மாறுபாடு இல்லாத உணவு கொள்க; அதையும் மறுத்துக் கொள்க. தேவைக்கு மேல் வைக்கும்போது தவிர்த்து விடுக. "மறுப்பது" மரியாதைக் குறைவல்ல. நலவாழ்வு அவரவர் கைகளில்தான் உள்ளது. அதனால் நமக்கு எவை தேவையோ, எவ்வளவு தேவையோ, அவற்றை, அந்த அளவில் கொள்வோம். அவற்றிற்கு மாறுபட்டனவோ, மிகுதிப்பட்டனவோ வழங்கப்படும் போது மறுத்து விடுவதே சால்புடையது. அதுவே நலம் காக்கும் நல்ல வழி. அதனால்தான் மறுத்துண்பார் உயிருக்கு ஊறுபாடில்லை என்றே உறுதிப்பாடு வழங்குகிறார் வள்ளுவர்.

உண்பது எதுவாயினும் அதை மகிழ்ந்து, மன நிறைவோடு உண்பதும் உண்ட உணவு செரித்தமை அறிந்து, நன்கு பசித்த பிறகு அடுத்த உணவு கொள்வதும் அப்படிக் கொள்ளும் உணவையும் மாறுபாடு இல்லாதனவாகத் தேர்ந்து நம் தேவைக்கேற்ற அளவில் அதிகம் இடப்படின் மறுத்துக் கொள்வதும் நலம் வளர்விக்கும் வழிகளாம். உடம்பு நெடி துய்க்க, மருந்தில்லாது வாழ வள்ளுவம் வழங்கும் இந்த ஆறு உணவுக் கோட்பாடுகளை நாம் அக்கறையோடு பின்பற்றினால் உணவு சார்ந்து வரக்கூடிய நோய்களைக் குறிப்பாக மாரடைப்பைத் தவிர்க்கலாம். மாரடைப்பைத் தவிர்க்க விரும்புவார் எண்ணெய், பால்பொருட்கள், அசைவ உணவுகள் ஆகியவற்றைத் தவிர்ப்பது நல்லது.

அமெரிக்க மக்களுக்கு வழிகாட்ட வள்ளுவம் இருக்கவில்லை. எனினும் மருத்துவர்களின் பரிந்துரைகளை ஏற்று இன்று மாரடைப்பு விகிதத்தைப் பெருமளவு குறைத்துள்ளனர். நமக்கு இரண்டாயிரம் ஆண்டுகளாக வள்ளுவ விளக்கு வழிகாட்டியும் அதைச் சரியாகப் பயிலாத, புரிந்துகொள்ளாத, பின்பற்றாத காரணத்தால் மாரடைப்பின் விகிதத்தை நாளும் அதிகப்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்" - 10

## (மு. பழனிஇராகுலதாசன்)

தேவகோட்டை ஸ்ரீராமகிருஷ்ணா நடுநிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியர் "இலக்கிய மேகம்" ந. சீனிவாசன் "நடையில் நின்றுயர் நாயகன்" என்று ஒரு நூல் எழுதியிருந்தார். ஆன்மிக நூல்வரிசையில் அந்த நூல் தேர்வுசெய்யப்பட்டு, தமிழக அரசின் மூன்றாம் பரிசையும் பெற்றது. அந்த நூலின் சிறப்புக்களையெல்லாம் புலப்படுத்தி, தேவகோட்டை பாரதி தமிழ்ச்சங்க நிறுவுநர் திரு பூவநாதன் அவர்கள் அந்த நூலுக்கு ஓர் அழகிய முன்னுரையும் வழங்கியிருந்தார். சிறிய வயதில், இராமாயணத்தில் நூல் எழுதி, தமிழக அரசின் பரிசும் பெற்றிருக்கிறாரே என மகிழ்ந்த தேவகோட்டை இலக்கியவாதிகளும் சமூகநலத் தொண்டர்களும், நூலாசிரியர் சீனிவாசனுக்கு ஒரு பாராட்டு விழா நடத்த வேண்டும் என விரும்பினார்கள். வழக்கறிஞர்கள் இராமச்சந்திர அய்யர், உ. சிவராமன், எம். இராமநாதன் முதலியவர்களும். திரு. பூவநாதன், விடுதலைவீரர் கே.எம்.எஸ். முதலியவர்களும், இன்னும் பல முக்கியமான சிந்தனையாளர்களும் அடங்கிய விழாக்குழு ஒன்று அமைக்கப்பட்டது. விழாவுக்குத் தலைமை ஏற்க, கல்விச் சேவுகர், சேவுகன் - அண்ணாமலை கல்லூரி நிறுவுநர் வள்ளல் சேவு. அண்ணாமலை செட்டியார் அவர்களை அழைப்பது என்றும், நூலாசிரியரை வாழ்த்திச் சிறப்புரையாற்ற தவத்திரு குருமகாசந்நிதானம் அடிகளாரை அழைப்பது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

விழா அமைப்பு - நோக்கம் - நாள், நேரம் ஆகிய குறிப்புக்கள் சகிதம், நூல், நூலாசிரியர் உட்பட விழாக்குழுவினர் குன்றக்குடிக்குச் சென்றோம். எனக்கு தவத்திரு அடிகளாரிடம் நூலாசிரியரை அறிமுகப்படுத்தல், நூல் பற்றிய செய்திகளைத் தெரிவித்தல், விழா நாளை உறுதிப்படுத்துதல் ஆகியவை பொறுப்புக்களாக அமைந்தன. கவிஞர் பரமகுரு அவர்கள் வழியே எங்கள் வருகை - நோக்கம்

ஆகியன குறித்து அடிகளுக்குத் தெரிவித்தோம். மேலே வந்து சந்திக்குமாறு கவிஞர் பரமகுரு மூலமே செய்தி வந்தது; மேலே சென்றோம். கவிஞர் பரமகுரு அவர்கள் புகைவண்டித் தொடரின் என்ஜின் போல முன்னே செல்ல, பின்தொடரும் பெட்டிகள் போல நாங்கள் பின்தொடர்ந்தோம். எங்களில் முன்னே யார், பின்னே யார், யார் என்பது நினைவில் இல்லை. பெட்டிகளில் முன்-பின் கணக்கு அவ்வளவு முக்கியம் இல்லாததால் மனத்தில் நிற்கவில்லை. சந்நிதானம் அவர்கள் முன்னால் வீழ்ந்து பணிதலும் வெண்ணீறு பெறுதலும் ஆகிய புனித நிகழ்வுகள் பவித்திரமாய் நிறைவெய்தின.

"தேவகோட்டையே வந்திருக்கிறதே! என்று முறுவல் செய்து உரையாடலைத் தவத்திரு அடிகள் தொடங்கினார்கள். எங்கள் நோக்கத்தை நான் விளக்கிச் சொன்னேன்; "நடையில் நின்றுயர் நாயகன்" நூலைத் தந்தேன். "நூலாசிரியர் எனக்கு மாணவர், நம் கல்லூரியில் பயின்றவர்" என்றும் எடுத்துரைத்தேன். ஒரு படைப்பாக்கம் என்பது வரலாற்றுக்குப் "புதிய வரவு" என்றும் "அது ஒரு சாதனை" என்றும் எப்போதும் கருதி, வாழ்த்தி வரவேற்கும் பாங்கு மிக உடையவர்கள் நம்முடைய அடிகள். எனவே மிகவும் மகிழ்ச்சியடைந்து வருகைதர இசைவளித்தார்கள். விருந்தினர்களை அமரவைத்து, எப்போதும் நின்றபடியே நிகழ்ச்சிகளை அளந்தும் அமைத்தும் நெறிசெய்கிற கவிஞர் பரமகுரு எங்கள் உரையாடலின்போதும் நின்றபடியே இருந்தார்கள். அது மடத்தின் தொன்று தொட்ட மரபு. தவத்திரு அடிகளுக்கும் வந்திருக்கும் விருந்தினர்களுக்கும் இடையே ஏதோ காரணத்தை முன்னிட்டு உரையாடல் நேரம் தாண்டி நீண்டுகொண்டே போகுமானால், நின்று கொண்டிருக்கும் கவிஞர் பரமகுரு, "அறிவானும் தானே, அறிவிப்பானும் தானே" என்பதற்கேற்ப, காலம் கடந்து செல்கிறது என்பதை அறிந்து, தனது அழகிய மெய்யசைவினாலே அறிவிப்பார்கள். உரையாடலின்போது நான் இருக்க நேரும் பட்சத்தில் கவிஞர் பரமகுரு அவர்களின் அழகிய இரண்டாவது மெய்யசைவுக்கு அவசியம் தராமலேயே புறப்பட்டுவிடுவேன். முதலாவது மெய்யசைவு அறிவிப்பின் போதே நான் எழுந்துவிட்டேன்; குழுவினரும் எழுந்தனர். எல்லாரும் முன் சென்றனர். எல்லாருக்கும் கடைசியாகப் பின்னால் என்னை நிறுத்திக்கொண்டேன். அதற்கு ஒரு காரணம் இருந்தது. எல்லோரும் முன்சென்றுவிட, நான் மட்டும் சிறிது தயங்கி, திரும்பி, மறுபடியும் அடிகளின் அறைக்குள் நுழைந்தேன்.

மறுபடியும் நான் வருவதை அடிகள் எதிர்பார்க்கவில்லை. ஏதோ ஒரு வியப்பு உணர்வோடு என்னை நோக்கினார்கள். நூலாசிரியரான சீனிவாசன் அந்தணர் வீட்டுப் பையன் என்ற செய்தியை அடிகளிடம் தெரிவிக்க வேண்டும் என்று என் உள் மனத்துக்குள் தோன்றியது. அடிகளைப் பொறுத்தவரை அது ஒரு செய்தியே அல்ல; ஆனால் சொல்லவேண்டும் என்று எனக்குத் தோன்றியது! எவ்வளவு சிறுபிள்ளைத் தனமான நினைப்பு அது! சொல்லலாமா, வேண்டாமா, சொல்வது தேவையா, பொருத்தமா? என்றெல்லாம் எனக்குச் சிந்திக்கத் தெரியவில்லை. அடிகளின் அருகில் சென்று "ஒரு செய்தி, சாமிகளிடம் தெரிவிக்க...." என்று வாக்கியத்தை முடிப்பதற்கு முன்னதாகவே "என்ன, சொல்லுங்கள்" என்றார்கள்.

"சீனிவாசன் அந்தணர் வீட்டுப் பையன்" என்றேன். நான் சொல்லிமுடிப்பதற்குள் அடிகள், "அதனால் என்ன"? என்றார்கள்.

"அதனால் என்ன" என்ற இந்த இரண்டு சீர் வினா வெளிவந்த வேகத்தையும் அதனுள் அடங்கிக் கிடக்கிற விவேகத்தையும் எவ்வளவுதான் முயன்றாலும் எழுத்தில் எழுதிக்காட்ட இயலாது. அத்தனை வேகம், அத்தனை விவேகம்! அந்த இருசீர் வினா, அடிகள் அமர்ந்திருந்த தனி அறையை ஒரு உலுக்கு உலுக்கி சாளரங்களை உடைத்துக்கொண்டு, பரந்துபட்ட தமிழகத்தின் எல்லாத் திசைகளிலும் சென்று இடித்து இடித்து இன்றும் கூட எதிரொலித்துக் கொண்டிருப்பதாகவே உணர்கிறேன். "அதனால் என்ன?" என்ற வினாவின் வேகத்தையும், விவேகத்தையும் இன்றும் நினைத்துப் பார்க்கிறேன்; நினைக்கும் போதெல்லாம் "அடிகாள்" என்று கைகூப்பி வணங்குகிறேன்!

குடியரசு நாட்டில் வாழ்கிற மக்களுக்கு, அரசியல் – ஆட்சியியல் பற்றிய அறிவு தேவை; விழிப்புணர்வு தேவை. இன்று நமது நாட்டு அரசியலை–மக்கள் அரசியலைக் கட்சிகளிடம் ஒப்படைத்துவிட்டோம். இது தவறு. கட்சியினர் ஆளட்டும்! ஆனால், எப்படி ஆளவேண்டும் என்று சொல்கிற உரிமை நமக்கு – நமது நாட்டு மக்களுக்கு இருத்தல் வேண்டும். நாடு முழுதும் பரவலாக அரசியல், பொருளாதாரப் பிரச்சனைகள் குறித்துப் பேசவேண்டும். ஒரு நாட்டு மக்கள் எதைப்பற்றிச் சிந்திக்கிறார்களோ, எதைப்பற்றிப் பேசுகிறார்களோ அந்தத் திசையில் நாடு நகரும்.

**– அருள்நெறித்தந்தை**

**கம்பன் கண்ட ஆட்சியில்–அரசியல் சமூகம்**

# அருளாலய ஐயவிழ்ப்பு

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

கண்ணனவன் கீதையிலே சொன்ன தாகக்
கணக்கற்ற பேர்வழிகள் சொல்வ தெல்லாம்
மண்ணுலகில் • அக்கிரம அநியா யங்கள்
மலிவாகத் தோன்றுகின்ற போது, கண்ணன்
கண்ணாரப் பார்த்துக்கொண் டிருக்கா திங்கே
கனிவுடனே அவதாரம் செய்வா னென்ற
திண்ணமுறும் கருத்தினையே எண்ணிப் பார்த்தேன்
தினமும்பல் ஐயத்தால் நெகிழ்ந்து போனேன்.

பாரதத்தில் துரியோதனன் செய்த அந்தப்
பாதகங்கள் பலவற்றைப் பார்த்த தாலே
பாரதத்தின் தேரோட்டி யான கண்ணன்
பார்த்தனுக்கு, அவ்வாறு பகர்ந்தான் போலும்!
பாரதத்தின், இன்றுள்ள நிலையோ டன்றிப்
பாரிலுள்ள நிலைகளையும் எண்ணிப் பார்த்தால்
பார்அதங்கள் பலவாறாய் இருப்ப தாலே
பலகண்ணன் ஆங்காங்கே தோன்ற வேண்டும்!

அவதாரம் அவனெடுக்க வேண்டு மென்றால்
அநியாயம் இந்நாட்டில் மலிய வேண்டும்!
அந்தவித மாய்ப்பார்த்தால் நடப்பு வாழ்வில்
அநியாயம் மலியாத கார ணத்தால்
அவதாரம் நிகழவிலை! ஆனால் நாட்டில்
அநியாயம் என்பதற்கா யன்றி நல்ல
அருள்வழங்க அவதாரம் செயலா மன்றோ?
அதற்கும்மே இலையென்றால், ஐயந் தானே!

அருள்வழங்கும் தகுதிக்கே ஆளில் லாமையால்
அவதாரம் நடக்கவிலை, ஒப்புக் கொள்வோம்!
தெருள்நிறைந்த இந்தியாவின் வடப்பக் கத்தில்
திகழ்கின்ற காஷ்மீர எல்லை மக்கள்
மருள்நிறைந்த மயக்கினிலே வாழ்க்கைத் தீயை
மடியினிலே கட்டிக்கொண் டெல்லா நாளும்
இருள்நிறைந்த குண்டுவெடி சத்தந் தன்னில்
இன்னாத தீபாவளி காண்ப தேனோ?

கொலைமிரட்டல் ஆட்டங்கள்! கொள்கை யில்லாக்
குண்டர்களின் தீவிரவா தத்தின் போக்கு!
மலைமலையாய் மக்களையே சுட்டுத் தள்ளும்
மனிதஉணர் வற்றதொரு மிருகக் கூட்டம்!
உலையரிசிப் பானையையே உடைத்துத் தள்ளும்
உடனிருந்தே கொல்கின்ற துரோகச் செயல்கள்!
அலையலையாய் அச்சடிக்கும் கள்ள நோட்டின்
அற்பமுடன் கள்ளச்சா ராயம் காய்ச்சல்!

முத்திரைத்தாள் மோசடிகள்! ஏலச் சீட்டை
முறையற்ற படிநடத்திச் சுருட்டி போகும்
எத்தர்களின் கூட்டங்கள்! எந்நா ளும்மே
எவரிடத்தும் வெட்கமின்றி லஞ்சம் வாங்கும்
பித்தமனம் படைத்திட்ட பேயர் கூட்டம்!
பிடிபட்டும் திருந்தாத பகற்கொள் ளய்யர்!
அத்தனையும் செய்வதெலாம் அறிவே இல்லா
அருவிலங்கா! ஆறறிவாம் மனிதர் தானே!

போதைமருந் துண்கின்ற பழக்கத் தாலே
பொல்லாத கடத்தலினைப் பூமி யெங்கும்
பாதையிலா ஆகாய விமானம் மூலம்
பதமாகச் செய்கின்ற பாத கங்கள்!
மாதைஅவ மானம்செய் வழக்கத் தாலே
மலிவான பாலியலால் மயக்கிப் பேசிக்
காதையரி கின்றாற்போல் செல்போன் சேட்டைக்
கச்சிதமாய்ச் செய்கின்ற கசடர் கூட்டம்!

கள்ளநோட்டு விவகாரத் தோடு, கஞ்சா
கடத்துகிற சர்வதேசப் பயங்க ரங்கள்!
அள்ளஅள்ளக் குறையாத வங்கி தன்னில்
அச்சமின்றி அடுத்தவரின் பணத்தை யெல்லாம்
கள்ளத்தன ஏ.டி.எம். கார்டைப் போட்டுக்
கவலையின்றித் துடைத்தெடுத்து வாழு கின்ற
குள்ளமனப் பேர்வழிகள் மலிந்து விட்ட
குவலயமாய் இருப்பதுதான் உண்மை யன்றோ!

வெளிநாட்டில் வேலைவாங்கித் தருவ தாக
வெல்லமெனப் பேசிபணம் பறிக்கும் கூட்டம்!
களிமிகுந்த பேச்சாலே போலி பாஸ்போட்
கணக்காகத் தயாரித்துப் பணம்ப றிப்போர்!
துளிகூட ஈவுஇரக் கங்கள் இன்றித்
துன்பம்செய் ரௌடித்தனத் தண்ட லோடு,
உளிபோன்ற கூர்மையுடன் துன்பம் செய்யும்
உண்மையிலா கட்டப்பஞ் சாயத் தார்கள்!

இப்படியாய்ப் பல்வேறாய்க் கூறக் கூற
இருநிலத்தில் பொய்ப்புதையல் தீமை மண்டி,
செப்புதற்கே ஒண்ணாத படியாய், உள்ள
செகத்தினிலே இன்னும்ஏன் பார தத்தில்
ஒப்பியஅக் கண்ணனவன் அவத ரிக்க
உன்னலையே? இதைவிடவா துரியன் நாளில்
அப்படியாய் அநியாயம் நடந்து போச்சு?
அக்கிரமம் அதிகப்படி மலிந்தா போச்சு?

பங்காளிப் பொறாமையினால் துரியன் அந்தப்
பாண்டவரைப் பலவாறாய் வதைத்த தன்றி
எங்காவது மக்கட்குத் துன்பம் தந்து
ஏராளக் கொடுமைகளைச் செய்தா னென்று
பொங்கார்வத் தோடெவரும் கூறு வாரா?
போகட்டும்! மேற்படிபோல் மக்க ளெல்லாம்
கங்காணிக் கசடர்களாய் இருந்த துண்டா?
காலமெலாம் இதற்குவிடை பகர்வா ருண்டோ?

*இப்படியாய் இருக்கையிலே இனிய கண்ணன்*
*இங்கேஇப் போதன்றோ வந்து தோன்றி*
*இருக்கின்ற இடுக்கணெலாம் களைய வேண்டும்!*
*என்றெண்ணும் ஏக்கத்தின் ஐயத் தோடே*
*இருள் புலரா வேளையிலே அருளா லயத்தின்*
*இரும்புக்கத வருகினிலே விழித்துக் கொண்டேன்,*
*இருந்திட்ட திருநீற்றை யெடுத்துப் பூசி*
*எதையெதையோ அசைபோட்டு நடந்தேன் நானே!*

சிந்திக்கத்தூண்டாத கல்வி, கேள்வி – ஊமை, வாய்மொழி செயலைத் தூண்டாத சிந்தனை – வெறும் பகற்கனவு. செயலாக்கம் பெறாத சிந்தனை – நறுமணம் பரப்பாத மலர். செயலாகாத சிந்தனை கறிக்குதவாத ஏட்டுச் சுரைக்காய்; மௌனபாஷை பேசும் ஊமைப் பாடல். அடுப்பில் ஏற்றி வைக்காத உலைப்பானை உணவுக்கு உதவாததைப் போல, செயலாகாத சிந்தனை பலன் தராது.

**– பொன்னம்பல அடிகளார்**

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

**- ஆசிரியர்**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# சுந்தரர் வாழ்வியல் உணர்த்தும் தோழமை நெறி

(சொ. அருணன், புதுச்சேரி)

## உயிர் (மிக்க ஒழுக்கம்) காப்பான் தோழன்

"அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு"

என்பது போன்று இறைவனும் நிற்க வேண்டிய சூழல் ஏற்பட்டது. சங்கிலியார் என்னும் திருப்பெயரில் அனிந்திதை அவதரித்திருந்த திருவொற்றியூருக்குச் சுந்தரர் சென்றபோது அவர்தம் அழகில் மயங்கினார். கண்ட அளவில் அன்பு பெருக, "என் ஆருயிரும் எழில் மவரும் கூடப் பிணைக்கும் இவள் தன்னைப் பொன்னார் இதழி முடியார் தம்பால் பெறுவேன்" என உருகினார். "ஊழிற் பெருவழி யாவுள" என்பதற்கேற்ப முன்னமே திருமணம் செய்திருந்த சுந்தரப் பெருமானுக்கு சங்கிலியார்பால் காதல் மிகுந்தது தவறென்பதா? சரியென்பதா? இறைவனிடம் சென்று முறையிட்டார் சுந்தரர் பெருமான். இறைவனும் இசைவு தந்து சங்கிலியார்தம் கனவில் சென்று "சுந்தரரை மணப்பாய்" என அருளாசி நல்கினார். ஆனபோதும் தவறிழைக்கும் தோழனுக்குத் தக்கபாடம் புகட்ட வேண்டி, சங்கிலியாரிடம் மகிழ மரத்தடியில் வைத்து சத்தியம் கேள் என்றார். சுந்தரரோ சத்தியம் செய்து சங்கிலியை மணந்துவிட்டார். இன்பம் துய்த்து இறைமறந்தார். தோழமைக்கு இது அழகாமோ? ஈசனுடைய நாடகம் அரங்கேற்றம் ஆயிற்று. சத்தியத்தை மீற முயன்ற சுந்தரர்தம் இருகண்களும் பொய்யாயிற்று.

"மைவிரவு கண்ணார்பால் சூளுறவு மறுத்ததனால்
இவ்வினை வந்தெய்தியதாம்"

என்று துடித்தார்; அழுதார்; அரற்றினார்; புலம்பினார்; தொழுதார்; தோத்திரம் செய்தார்; தோழந் தந்த பாடம் கற்றுத் தேர்ந்தார்; பின் அவருக்கு அருள் கிட்டிற்று. தடியொன்று தந்து தோழர் வழிகண்டு செல்க என்றார். அழுகை முட்டிற்று சுந்தரர்க்கு. "விண்ணாள்வார்

அமுதுண்ண மிக்க பெரும் விடமுண்ட கண்ணாளா! கடையனேன் எண்ணாத பிழை பொறுத்து இங்கு யான் காண கண்ணளித்தருள்வாய்" என வேண்டி இடக்கண் பெற்றார். பின்னும் தோழர்க்கு அவர் செய்த பிழையுணர்த்த பிணி தந்தருளினார். பொறுக்காத சுந்தரர் தம் பாடல்களால் இறைவனை வேண்டி திருத்துருத்தியை அடைந்து அங்குள்ள திருக்குளத்தில் நீராடிப் பிணி நீங்கப் பெற்றார். மறு கண் இன்னும் வாராமையினால் மனம் வருந்திய சுந்தரர் "மற்றைக் கண்தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதீரே!" என ஊடியும், உணர்ந்தும் பாட இறைவன் இரங்கி அருளினார். இது இறைவனே தோழனாயினும் தோழமைக்கும் ஒரு நியதி உண்டு என்பதை இறைவரே உணர வைத்தார் என எண்ணுதற்கு நல்ல சிந்தனையை நல்கிற்று. இவ்வழி சுந்தரரின் வாழ்வு தோழமையால் தவறுகண்ட விடத்துத் தண்டனை பெற்றுத் திருத்தம் உற்றமையும் சிறப்புக்குரியது.

பழி தீர்ந்த தோழன்

தன் தோழன்படு துயரம் தீர்த்த இறைவன் அதற்குக் கைம்மாறாக வேறொரு பணியைச் செய்ய வேண்டியதாயிற்று. சுந்தரர் செய்த தவற்றுக்கெல்லாம் உடனின்று ஒத்தூதியவர் இறைவன் என்பதால் தானும் அவற்றுக்குத் தண்டனை அடைய வேண்டியதாயிற்று. சங்கிலியாரை மணந்த சுந்தரரின்மீது தீராக் கோபம் கொண்டார் பரவைநாச்சியார். ஆரூரர் மிக வருந்திப் பரவையாரின் ஊடல் தணிக்க அடியவர்களை வேண்டினார். அது இயலாததாயிற்று. உடனே தோழரை அழைத்து, "எமக்கு நீயே தலைவர் என்பதும் உமக்கு நானே அடியேன் என்பதும் வாய்மை ஆயின் நீர் இவ்விரவே பரவையாரின் புலவி தீர்த்தல் வேண்டும்" என வேண்ட, இறைவனும் தான் செய்த தவற்றுக்குப் பரிசாய் இத்தூதர் பதவி கொண்டார். "நின் துன்பம் ஒழி; நினக்கோர் தூதனாகி இப்போதே போகிறோம்" என்று அருள் செய்தார். ஆனால் பரவையாரோ, "சங்கிலி தொடர்க்குண்டார்க்கு இங்கு ஓர் சார்வுண்டோ?" என வெகுண்டார். மேலும் "இது உமக்குத் தகலாமோ?" என இருபொருள்படும்படியாக (தோழன் செய்த தவற்றுக்கு நீயும் உடந்தையாய் இருப்பது தகுமோ?) எனக்கூறிவிட்டார். இது கேட்டு வருந்திய சுந்தரர் "வானவர் உய்ய வேண்டி மறிகடல் நஞ்சம் உண்டீர்! தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்! நான்மறைச் சிறுவர்க்காகக் காலனைக் காய்ந்து நட்டீர்! இத்தகைய பேராற்றலும்

பெருங்கருணையும் உடையீருக்கு என்குறை மிகையன்று; எனினும் நீர் இயலாது வந்தது யான் மிகையெனக் கருதிப் போலும்!" எனக் கூறி வீழ்ந்தார். உடன் தோழர் தாம் மீண்டும் சென்று சுந்தரர்க்கு துயரம் தீர்ப்பேன்" என உறுதிகூறித் தம் நாடகத்தை நிறைவு செய்தார். இதன்மூலம் தோழன் செய்யவேண்டிய நெறிமுறைக்கு இறைவனும் வேறில்லை என்பது மெய்ப்படுகிறது.

பகையான தோழமை

என்னதான் இறைவன் சுந்தரர்க்கு தோழனாய் இருந்தபோதும் பெண்ணின் ஊடல் தீர்க்கும் பொருட்டு இறைவன் போகலாமா? அப்படி அவர் போவதாகக் கூறினாலும் சுந்தரர் அவரைத் தடுப்பதை விட்டுவிட்டு அவரே போகுமாறு வேண்டுதல் என்ன முறை? எனப் பலர் பேசுவர். இது உலகியல் உண்மை. இதன்மூலம் மற்றொரு நாடகம் நடத்த விழைகிறார் எம்பெருமான். சுந்தரர் தம் மீது கொண்டிருந்த தோழமை ஏனைய மானுடத் தோழமையன்று; இறைத் தோழமை என்பதனை மெய்ப்பித்துக் காட்ட, கலிக்காமனாரை ஒரு பாத்திரமாக்குகிறார். கலிக்காமனார் என்பார் ஏயர்கோக்குடியில் பிறந்தவர். இறைவனிடத்தும் அடியவரிடத்தும் பேரன்பு பூண்டவர். இறைவன் சுந்தரரின் பொருட்டுத் தூது சென்றதை அறிந்ததும் அவர் அளவிலாக் கோபம் கொண்டார். சுந்தரர்பால் கொண்டிருந்த பக்தியும் அன்பும் காற்றில் பறந்தோடிற்று. இதற்கு இறைவனே தீர்வு காண வேண்டும் என சுந்தரர் தோழரை வேண்டினார். இறைவனும் கலிக்காமரின் அன்பையும், சுந்தரரின் பெருமையையும் ஒரே காலத்தில் உலகுக்கு உணர்த்த விரும்பி கலிக்காமருக்குச் சூலைநோயைத் தந்தருளினார். அதோடு விடாமல் அவர் முன் தோன்றி "நம்பியாரூரானை அன்றி பிறரால் இப்பிணி தீராது" எனக்கூறி மேலும் அவர்தம் ஆத்திரத்தைக் கிளறிவிட, கலிக்காமரோ, "நம்பி ஆரூரனா இந்நோய் தீர்ப்பது? அதனினும் இறப்பது மேல்" எனச் சினந்து கூறினார். ஈங்கு தோழமைப் போட்டியே நிலவுகிறது. கலிக்காமர் இறைவனை எசமான உறவில் வைத்துப் போற்றுவதனால் அவருக்கு அவ்வாறு சினம் வருதல் முறையேயாகும். ஆனால் சுந்தரரின் பெருமை குறித்து உலகோரைப் போலவே அவரும் கருத்துக் கொண்டிருந்த காரணத்தால் அவரைக் கொண்டே உலகத்தார்க்குப் பாடம் புகட்ட தோழமையின் மாண்பைப் புலப்படுத்த ஈசன் இவ்வாறு நாடகமாடியது புலப்படுகிறது. இறுதியாக,

இறந்துவிட்ட கலிக்காமரைத் தோழமையன்பால் உயிர்ப்பித்துக் கலந்து கொள்கிறார் சுந்தரர் பெருமான். இது தோழமையின் செந்நெறி என்பது தகும்.

நிறைவாக

இவ்வாறு பல்வேறு விந்தைகளும் அற்புதங்களும் இறைவனைத் தோழமையாகக் கொண்ட அருளால் செய்து வந்த சுந்தரர்க்கு இறுதியாக இவ்வுலக வாழ்வு கசந்து போனது. திருவஞ்சைக்களத்திற்குச் சென்ற சுந்தரர் மனைவாழ்வை வெறுத்து இறைவனை ஆட்கொள்ளுமாறு வேண்டினார்.

"வெறுத்தேன் மனை வாழ்க்கையை விட்டொழித்தேன்!" என்னும் அவர்தம் வேண்டுகோளை ஏற்ற இறைவன் வெள்ளை யானையை அனுப்பிக் கயிலைக்கு வரவழைத்தார். இத்தோழமையன்பை நினைந்து நெக்குருகிய சுந்தரர்,

"வான் எனைவந் தெதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை உத்தமனே!"

என்று இறைவனைப் போற்றிப் பாடுகிறார்.

இவ்வாறு கயிலையில் தொடங்கிக் கயிலையில் போய் நிறைந்த சுந்தரர் வாழ்வைக் கொண்டு சிவபெருமான் நிகழ்த்திய இத்திருவிளையாடல் யாவும் தோழமை நெறியை உலகுக்கு உணர்த்தத்தான் எனில் அது மிகையன்று.

சமூகத்தில் பலவீனமான அமைப்புகள் இருந்தால் கூனி போன்ற சாதாரணமானவர்களால் கூட பெரிய குழப்பங்களை உருவாக்கிவிட முடியும் எனத் தெரிகிறது. எனவே சமூகத்தில் பலவீனமான அமைப்புகளை சரிசெய்ய வேண்டும்.

– அருள்நெறித்தந்தை

# அறிவியல் உறவும் ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

பாகம் - 3

ஆரம்ப காலத்தில் திட்டக்குழு குன்றக்குடி - நேமம் கிராமங்களுடைய ஒருங்கிணைந்த முன்னேற்றத்திற்காக அமைக்கப்பட்டு ஒவ்வொரு மாதத்திலும் 4-வது சனிக்கிழமை காலை நேமத்திலும், மதியம் குன்றக்குடியிலும் கூடி திட்டங்களைப் பரிசீலித்து ஆய்வு செய்யும். ஒரு முறை நேமத்தில் திட்டக்குழு கூடும்பொழுது நம் பகுதியிலுள்ள ஏராளமான புன்செய் தரிசு நிலங்களைப் பயன்படுத்துவது பற்றி 08.10.1978 அன்று விவாதித்து ஒரு மாதிரி தோட்டக்கலைப் பண்ணை நேமத்திலும் குன்றக்குடியிலும் ஆரம்பிப்பது என்றும் நவீன அறிவியல் தொழில்நுட்பத்தைக் கொண்டு செயல்படுத்துவது என்றும் முடிவு எடுக்கப்பட்டது.

போர்க்கால அடிப்படையில் நேமம் கிராமத்தில் 50 ஏக்கர் பஞ்சாயத்து புறம்போக்கு நிலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. 06.01.1979ல் பழத்தோட்டத்தை துவக்க முடிவு செய்யப்பட்டது. அப்பொழுது இருந்த சாக்கோட்டை வட்டார அலுவலர் திட்டத்தில் ஈடுபாடு கொண்டு ஒன்றியத்திலிருந்து கொஞ்சம் நிதி ஒதுக்கீடு செய்து தந்தார்கள். இந்த முன்மாதிரியான நல்ல செயலுக்கு அவர் பின்பு தண்டிக்கப்பட்டார் என்று அறிந்தோம்.

தவத்திரு அடிகளார் அவர்கள் உடனே தொலைபேசி மூலம் மதுரை வேளாண்மைக் கல்லூரியில் (டீனாக) இருந்த பேராசிரியர் இராசகோபாலன் என்பவரை தொடர்பு கொண்டு திட்டத்திற்கு உதவுமாறு வேண்டினார்.

விரைவில் 4 விஞ்ஞானிகள் அடங்கிய குழு மதுரையிலிருந்து வந்தது. மண் பரிசோதனை செய்யப்பட்டது. நிலத்தடி நீர் கணக்கிடப்பட்டது.

கொய்யா, மா, பலா, மாதுளை, மலர் செடிகள் என்று ஒவ்வொன்றிற்கும் நில ஒதுக்கீடு செய்யப்பட்டு, ஒட்டு ரகங்களுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆறு மாத கலத்திற்குள் தோட்டம் உருவாயிற்று. அப்பொழுதே அடிகளார் அவர்கள் இதிலிருந்து கிடைக்கக் கூடிய பழங்கள் கிராம மக்களுக்கு குறைந்த விலையில் விற்கப்பட வேண்டும் என்றும் பெரிய விவசாயிகளுக்கு ஏலம் விடக்கூடாது என்ற கருத்தைத் தெரிவித்தார்கள்.

பழங்கள் மேலும் அதிகமாகக் கிடைக்கும் காலத்தில், குன்றக்குடியிலேயே பழங்கள் சார்ந்த தொழில்கள் ஆரம்பிக்க முடிவு எடுக்கப்பட்டது.

இந்த தோட்டத்தை பார்வையிட்ட வறட்சிக்கு இலக்காகும் பகுதித் திட்டத்தின் இயக்குநர் தாமாகவே முன்வந்து, இதை DPAP திட்டத்தின் கீழ் அரசே நடத்தலாம் என்று முடிவு செய்து அதே இடத்தில் 100 ஏக்கர் பரப்பளவில் இத்தோட்டத்தை விரிவுபடுத்தினார்கள். இப்பொழுது 200 ஏக்கர் அளவிற்கு இந்த திட்டம் வளர்ந்து திருவளர்ச்சோலை என்று அழைக்கப்படுகிறது.

அது திட்டக்குழுவின் பணிகளுக்கு ஒரு அங்கீகாரமாக இருந்தது. அரசு பொறுப்பு எடுத்தாலும், அடிகளார் அவர்கள் விளைபொருட்கள் நம் பகுதியை விட்டு வெளியே போய்விடக்கூடாது என்று கூறினார்கள். பழங்களை மாற்றுப் பொருட்களாக்கக் கூடிய தொழிற்சாலைகள் ஆரம்பிக்க திட்டமிடப்பட்டது. இன்று Value Added Products என்று கூறுவதை அன்றே அடிகளார் அவர்கள் செய்ய நினைத்தார்கள்.

இதன் விளைவுதான் அடிகளார் அவர்களின் மைசூரில் உள்ள CFTRI விஜயம் (Central Food Technological Institute) இந்த ஆய்வகம் காய்கறிகள் மற்றும் பழங்கள் பக்குவப்படுத்துதல், சத்துள்ள உணவுப் பொருட்கள் தயாரித்தல், உணவுத் துறைக்கு வேண்டிய இயந்திரங்கள் கண்டுபிடித்தல் போன்ற பலவகைகளில் ஆராய்ச்சி செய்து வருகிறது. செக்ரியிலிருந்து CFTRI இயக்குநருக்கு கடிதம் எழுதி அடிகளாரின் அந்த ஆய்வகப் பார்வைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

அடிகளார் அவர்களுக்கு பெங்களூரில் ஒரு நிகழ்ச்சி இருந்தது. அதை முடித்துக் கொண்டு அவர்களும் நானும் காலையில் புறப்பட்டு மைசூருக்கு 10 மணி அளவில் சென்று அடைந்தோம். ஆய்வகத்தின் விடுதியில் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அப்பொழுது இயக்குநர் அவர்களிடம் "நீங்கள் கிராம மக்களுக்கு வேளாண்மை சார்ந்த துறையில் நல்ல தொழில் நுட்பங்கள் வைத்திருக்கிறீர்கள். இவற்றை அவர்களுக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

எங்கள் கிராமத்தில் உங்களுடைய விஞ்ஞானிகள் வந்து செய்து காண்பித்தால் கிராம மக்களுக்கு இம்மாதிரியான தொழில்களில் ஈடுபாடு வரும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை எங்கள் கிராமத்தில் செய்து தருகிறேன் என்றார்கள்".

ஒரு ஆன்மீகவாதி இப்படி அறிவியல் தொழில்நுட்பங்களை கிராமத்தில் பரவச் செய்ய விரும்பும்பொழுது நாங்கள் நிச்சயமாக உதவி செய்வோம் என்று கூறி விஞ்ஞானிகள் அடங்கிய ஒரு குழுவை ஒரு வாரகாலத்திற்கு குன்றக்குடிக்கு அனுப்பினார்கள். பல தொழில் நுட்பங்கள் செய்முறை விளக்கத்துடன் செய்து காண்பிக்கப்பட்டது. ஆய்வகங்கள் தொழில் நுட்பங்கள் கொடுக்கும்போது அதற்கென்று இரண்டுவிதமான கட்டணங்கள் வசூலித்தன. ஒன்று தொழில் நுட்பம் வாங்கும்போது மொத்தத் தொகை. பிறகு உற்பத்தியில் குறிப்பிட்ட விழுக்காடு "ராயல்டி." ஆனால் அடிகளாருக்கு எந்தவித கட்டணமுமில்லாமல், தொழில் நுட்பங்கள் செய்து காட்டப்பட்டன.

அந்த அடிப்படையில் உணவுத்துறை அனுமதி பெறப்பட்டு, முழுமையான சிறிய அளவில் பழப்பக்குவத் தொழிற்சாலை குன்றக்குடியில் அமைக்கப்பட்டு, பழச்சாறு, ஜாம், ஜெல்லி, அப்பளம், ஊறுகாய் வகைகள் என்று பல உணவுப் பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டு விற்பனை செய்யப்பட்டன.

இத்தொழிலில் ஈடுபட விரும்புவோர்களுக்கு அது பயிற்சி மையமாகவும் இருந்தது. 26.01.1980 அன்று நடந்த திட்டக்குழுக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

"புஞ்சை நிலங்களை சாகுபடிக்கு கொண்டுவர பிரைவேட் லிமிடெட் முறையில் கூட்டு சாகுபடி முறையை கொண்டுவர வேண்டும் என்றும் அதற்கான திட்டத்தை ஊர்நல அலுவலர் தயார் செய்யும்படியும் கேட்டுக்கொள்ளப்பட்டது".

ஆய்வகத்தின் அனைத்து துறைகளின் கண்டுபிடிப்புகளையும் விளக்கினார்கள். பிறகு புதிய தொழில் நுட்பங்களை விளக்கினார்கள். குறிப்பாக நெல்லை புழுங்க செய்து (வேக வைத்து) உடனே அதை Reverse Osmosis என்ற முறைப்படி உப்புத் தண்ணீரைக் கொண்டு உலரவைத்து, அரைத்து அரிசி ஆக்கக் கூடிய தொழில் நுட்பம். இதை Rice Mill என்று அழைத்தார்கள். மேலும் நெல்லை ஒரு பக்கத்தில் கொட்டினால், அது உலர வைக்கப்பட்டு, வறுக்கப்பட்டு, இடிக்கப்பட்டு, மறுபக்கம் அவலாக (Rice Flakes) வரக்கூடிய தொழில் நுட்பங்கள் காண்பிக்கப்பட்டன. நீர் வெளியேற்றப்பட்ட தேங்காய் துருவல்கள் (Dehydrated Cocunut Powder) ஊறுகாய் தயாரித்தல், பழங்கள் பக்குவப்படுத்துதல், புரதம் அதிகமுள்ள உணவுப் பொருட்கள் தயாரித்தல், முந்திரிப் பழத்திலிருந்து ·ஆல்கஹால் எடுக்குத் தொழில் நுட்பம் என்று பலவிதமாக செய்திகளை அடிகளார் உன்னிப்பாக கவனித்து குறிப்பு எடுத்துக்கொண்டார்கள். குன்றக்குடி பகுதியில் முந்திரி அதிகமாக இருப்பதால் முந்திரி பழத்திலிருந்து குடிப்பதற்கான ஆல்கஹால் எடுக்கலாம் என்ற கருத்தை விஞ்ஞானிகள் தெரிவித்தார்கள். அடிகளார் அதற்கு சந்தை வாய்ப்பை பற்றி கேட்டறிந்தார்கள். அது புதுவகையான பானமாக இருப்பதால் சந்தை விலை உடனடியாக கிடைக்கவில்லை. ஆகையால் இது கைவிடப்பட்டது. பப்பாளியிலிருந்து "கச்சா பப்பயின்" என்ற வேதியியல் பொருள் தயாரிப்பது, மரத்தில் உள்ள பப்பாளிக் காயைக் கீறி அதிலிருந்து வடியும் பாலை பப்பாயினாக மாற்றுவது, பப்பாயின் உணவுப் பொருட்கள் தயாரித்தல், மருந்துகள் தயாரித்தல், துணிகள் தயாரிக்கும் தொழில்கள் என்று பல முக்கியமான துறைகளில் பயன்படுத்தப்படும் ஒரு பொருள். தோட்டக் கலையை அடிப்படையாகக் கொண்ட தொழில், ஆகையினால் அடிகளார் அவர்கள் விஞ்ஞானி P. சுப்பையாவையும், தோட்டக்கலை நிபுணர் காலம் சென்ற திரு. சிதம்பரம் அவர்களையும் இத்துறையில் பயிற்சிக்காக திட்டக்குழு சார்பில் அனுப்பிவைத்தார்கள். பிறகு மாலையில் இயக்குநர் மற்றும் விஞ்ஞானிகளுடன் கலந்துரையாடல் நடந்தது.

தரிசுநில மேம்பாட்டுத் திட்டம் இன்று வெகுவாக அரசுத் துறைகளில் பேசப்படுவது நாம் அறிவோம். ஆனால் அடிகளார் அவர்கள் அன்றே இத்திட்டத்தின் மூலமாகத்தான் கிராமப் பொருளாதாரம் உயர முடியும் என்று தரிசு நிலங்களை பயன்படுத்த வழி காட்டியுள்ளார்கள். மேலும் நவீன தொழில் நுட்பங்களைக் கையாளுவதினால் அதிக விளைச்சல் கிடைத்து லாபகரமாகத் தோட்டக்கலை அமையும் வாய்ப்பை எடுத்துக்காட்டினார்கள். இன்று 'Value Added Products' என்று பலராலும் பேசப்படும் தாரக மந்திரத்தை அன்றே ஆய்வகத்தின் உதவி மூலம் குன்றக்குடி கிராமத்தில் நடைமுறைப்படுத்தினார்கள்.

மக்கள் வளர்ச்சிக்கு உழைப்பும், அறிவியல் தொழில் நுட்பமும் இணைந்து செயல்படுவது அவசியம் என்பதை செயல்பாட்டின் மூலம் விளக்கிய ஆன்மீக தீர்க்கதரிசிக்கு நாம் என்றும் கடமைப்பட்டுள்ளோம்.

அடுத்து வருவது அடிகளார் அவர்களின் மையத் தோல் ஆராய்ச்சி நிறுவனத்தின் விஜயம்.

(தொடரும்)

## நடத்தையில் எளிமை; மனித வர்க்கத்திற்குச் சேவை

முன்பு மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ்ப் பணியாற்றும் பாக்கியம் நமக்கு இருந்தது. மகாத்மா காந்தியின் வழி வந்தவர்கள் என்ற முறையில் காங்கிரஸ்காரர்கள், தாங்கள் மேற்கொண்ட சிறந்த லட்சியத்தையும் உயர்ந்த ஒழுக்கத்தையும் கடைப்பிடித்தாக வேண்டும். மற்ற கட்சியைச் சேர்ந்தவர்களிடம், எதிர்பார்ப்பதைவிட, உண்மையில் காங்கிரஸ்காரர்களிடத்தில்தான் உயர்வான நடத்தையை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். ஆகையால் நமது அன்றாட நடத்தையில் காந்தீய வழியை மேற்கொள்ள வேண்டும் என்று எல்லோரையும் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன், மகாத்மாவிடமிருந்து மகத்தான அருங்குணங்களில் முக்கியமாகப் பிரகாசித்தவை இரண்டு. அவை "நடத்தையில் எளிமை" "மனித வர்க்கத்திற்குச் சேவை" என்பவையே. நாம் கனவு கண்டு வந்திருக்கும் நவ இந்தியாவை. இந்த எளிதான இரு கருவிகளைக் கொண்டு நாம் அமைப்போமாக.

– பெருந்தலைவர். **காமராஜர்**

(இந்திய தேசிய காங்கிரஸ் 68-வது மகாசபை தலைமை உரையிலிருந்து)

# பாடம் ஒன்றா?

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

மரத்தினின்று கனிவீழும் காட்சி தன்னை
மலைப்போடு பார்த்திருந்தோம்; எனினும் மூளை
உரத்தாலும் திறத்தாலும் 'நியூட்டன்' தானே
உயர்புவியின் ஈர்ப்புவிசை அதுதான் என்றார்!
நெருப்படுப்பில் ஏற்றிவைத்த பாத்தி ரத்தின்
நீர்மூடி குதிப்பதனை நாமும் கண்டோம்;
உருப்படியாய் 'நீராவிச் சக்தி' என்றே
ஓடு'தொடர் வண்டி' கண்டோர் 'ஜேம்ஸ்வாட்' தானே!

வான்முகட்டில் நீந்துகின்ற பறவை தன்னை
வாய்பிளந்தே பார்த்தோம்நாம்; எனினும் 'மாந்தன்
ஏன்பறக்கக் கூடாதாம் அதுபோல்?' என்றே
எழில்'வான ஊர்தி' கண்டோர் 'ரைட்' சே அன்றோ?
மீன்துள்ளும் கடல்முதுகில் ஏறிச் சென்றே
மிகப்பலரும் கடந்தார்கள்; எனினும் இன்று
தான்என்னும் வல்லரசாம் 'அமெரிக் கா'வைத்
தாரணிக்கே காட்டியவர் 'கொலம்பஸ்'தானே!

எத்தனையோ புலவர்பலர் இருந்தார்; நாளும்
இலக்கியங்கள் பலபடைத்தார்; எனினும் ஈங்கே
அத்தனைக்கும் மணிமுடியாய் அகிலம் போற்றும்
அரிய'பொது மறை'யளித்தோர் 'குறளார்' தானே!
முத்தான சிந்தனையால், புதுமைத் தேடல்
முனைப்பாலே வரலாற்றில் ஏறி நிற்போம்!
மொத்தத்தில் வித்தகங்கள் நிகழ்த்த் 'நுட்ப
மூளையொன்றே மந்திரக்கோல்!' மறுப்போர் உண்டா?

# தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

## *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008
மக்கள் சிந்தனை ஜூலை / 2006. வெளியீட்டு நாள் 20-07-2006






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166